24th April 1962]

THE HON. SRI R. VENKATARAMAN : இதன் மூலம் தனியார் துறை பாதிக்கப்படும் என்று நினைத்தால் அது உயர்ந்த லட்சியம் அல்ல. அது நல்ல லட்சியம் என்று சொல்ல முடியாது. ஆனால் இனி 120 மைலுக்கு மேல் இருக்கக்கூடிய ரூட்டுகளைக் கொடுக்கப் போவது இல்லை. அந்த முடிவு ஒரு சிறந்த முடிவுதான். இதுவே ஒரு சிறந்த முடிவுதான்.

SRI V. S. S. MANI : ஜீப் பஸ்கள் ஓடக்கூடிய ரூட்டுகளும் எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜீப் பஸ்கள் ஓடக் கூடிய ரூட்டுகளை எடுத்துக்கொள்ளும் உத்தேசம் இல்லை. இப்பொழுதுள்ள திட்டப்படி 120 மைலுக்கு மேல் உள்ள ரூட்டுகளை எடுத்துக்கொள்வதாக உத்தேசம். அதுவே இன்னும் முடிவு அடையவில்லை. அதனால் கனம் அங்கத்தினர் சொன்னதைப்பற்றி இப்பொழுது யோசனை பண்ணுவதற்கு இல்லை. இதன் பிறகுதான் அவர் சொன்னதைப்பற்றி யோசிக்கலாம்.

SRI V. KRISHNAMOORTHY : கனம் சபாநாயகர் அவர்களே, ஆளும் கட்சிக்கு பலம் குறைந்துவிடும் என்ற காரணத்தால் பஸ்களை உடனடியாக சர்க்கார் தேசியமயமாக்கவில்லை என்பது வாஸ்தவம் தானா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆளும் கட்சியின் பலத்தைக் குறைக்க வேண்டும் என்கிற காரணத்திற்காக எதிர்க் கட்சிக்காரர்கள் பஸ்களை தேசியமயமாக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள் என்பதில் உண்மையிருந்தால் இதிலும் உண்மை இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளலாம் (ஆரவாரம்).

SRI A. P. DHARMALINGAM : அப்படியென்றால் அரசாங்கம் பஸ் முதலாளிகளுக்கு பலம் காட்டுகிறார்கள் என்பது உண்மை தானா ?

(பதில் இல்லை.)

MR. SPEAKER : Questions are over.

[*Note:*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## III.—ANNOUNCEMENTS.

### (1) NOMINATION TO THE PANEL OF CHAIRMEN.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 14-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் பின்வரும் ஆறு சட்டசபை அங்கத்தினர்களை இச் சபையின் முதல் கூட்டத் தொடரின்

[Mr. Speaker] [24th April 1962

தாற்காலிகத் தலைவர்களாக நான் நியமனம் செய்துள்ளேன் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன் :—

(1) திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்
(2) திரு. ந. ச. சுந்தரராஜன்
(3) திரு. தோ. மு. நல்லசாமி
(4) திரு. அ. ராகவ ரெட்டி
(5) திரு. எஸ். மாதவன்
(6) திரு. ஏ. சுவாமிதாஸ்.

(2) NOMINATION TO THE BUSINESS ADVISORY COMMITTEE.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 193-ஆவது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ், கீழ்க்கண்ட சட்டசபை அங்கத்தினர்களை அலுவல் ஆலோசனைக் குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் செய்கிறேன் :—

(1) கனம் சபாநாயகர் (உத்யோக முறையில் தலைவர்)
(2) திரு. கே. பார்த்தசாரதி (உதவி சபாநாயகர்)
(3) கனம் திரு எம். பக்தவத்சலம் (சபை முதல்வர்)
(4) கனம் திரு. பூ. கக்கன்
(5) கனம் திரு. வி. ராமைய்யா
(6) திரு. பா. ராமச்சந்திரன்
(7) திரு. இரா. நெடுஞ்செழியன்
(8) திரு. சா. கணேசன்
(9) திரு. மீ. கலியாணசுந்தரம்.

(3) NOMINATION TO THE RULES COMMITTEE.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 229-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ், கீழ்க்கண்ட அங்கத்தினர்களை விதிகள் இயற்றும் குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் செய்கிறேன் :—

(1) கனம் திரு. எம். பக்தவத்சலம் (சபை முதல்வர்)
(2) திரு. கே. பார்த்தசாரதி (உதவி சபாநாயகர்)
(3) திரு. பா. ராமச்சந்திரன்
(4) திரு. எஸ். ராமசாமி நாயுடு
(5) திரு. கி. நாராயணசுவாமி பிள்ளை
(6) திரு. கே. டி. கோசல்ராம்
(7) டாக்டர் ப. நடராஜன்
(8) திரு. பி. பரமேஸ்வரன்
(9) திரு. என் ராமச்சந்திர ரெட்டி
(10) திரு. இரா. நெடுஞ்செழியன்
(11) திரு. சா. கணேசன்
(12) திரு. மீ. கலியாணசுந்தரம்
(13) திரு. எஸ். மாதவன்
(14) திரு. டி. எல். சசிவர்ண தேவர்.